தித்திக்கு மத்தி யூரைச் சேர்பவர்க் கெனவே நாடி
யெத்திக்கு மிசைக்கு மந்த வைந்தினி னிறுதி யோதி
மற்றத்தி கிரிமா காண்மி யம்மென மகிழு நூலோன்
றத்தக்க திவிய தேசத் தண்ணலு மறைந்தா ரன்றே. 14

வேறு

பின்னமருங் கருகிருந்து கடைக்கணிக்கும்
விளக்கொளியான் பெருமை தன்னை
மின்னுசர ணுகதிதீ பிகையெனவே
மிழற்றறிய நூலா யாற்றி
மன்னுதரு வட்டபுயம் வெஃகாவே
ளுக்கைகளில் வதியு மாயன்
பொன்னடியும் புகுதிறைஞ்சி யங்கங்கே
டொலியுதிரு மூர்த்தங்கட்கும். 15

ஏத்தனுறு மட்டபுயாட் டகந்தனையு
மேமமுறு மெதோக்த காரி
தோத்திரமுங் காமாசி காட்டகமுந்
தோமறவே நிரலே யாற்றிப்
பூத்தலேயிற் பவளவடி யோதிமமின்
பெடையோடும் பொருந்தியாடு
மார்த்தகவன் பனேசூழு மணிமதிலார்
புட்குழியை யடைந்தா ரன்றே. 16

அப்பதியி னலங்குதிரு மரகதவல்
லியனடியைத் தொழுது முன்னர்
முப்பொழுது முத்தொழிலு மூவுருவுந்
தானுகி மூல மாய
வொப்புயர்வின் ஞெளிர்விசய ராகவனைத்
தொழுததன்பி னவர்க்கே யொன்றுஞ்
செப்பரிய பரமார்த்த துதியென்றோர்
செழும்பனுவ லருளிச் செய்தார். 17

மீண்டொருகாற் சுதரிசனட் டகஞ்சோட
சாயுததோத் திரமு மேன்மை
பூண்டொளிரப் புகன்றருளி யுத்தமவ
மர்த்தலமென் றுவந்து போற்று

மேண்டிகழுங் கவிப்படியி ராகவனுங்
கண்ணறுமிவ் விறைவன் பங்கென்
றுண்டவறி வாளர்சொலு மருளாளன்
விடயமுற வருளிச் செய்தார். 18

பவக்கடலின் சுழிவலியைப் படலாற்றுந்
தேசிகர்கட் பார்வைக் குற்றே
னவைக்கிடனுந் தொழில்களிலா ரசையற்றே
னயல்விரகோ வெவையு நண்ணேன்
தவர்க்கரிய தத்துவஞா னக்கனிநெனன்
சங்கையெலாந் தகர்த்துத் தேர்ந்தேன்
சுவைக்கனியே யளப்பரிய வருணிதியே
யடியர்படுந் துயக்கந் தீர்ப்போய். 19

மூலமென வோலமிடுங் கரிக்கருளுங்
கரிகிரியார் முதல்வா வுன்றன்
சீலமுறுஞ் சேவடிமே லென்பரத்தைச்
சேர்த்தினனு யினியோர் துன்பென்
பாலணுகா தென்றடியே னிர்ப்பரனுய்
நிர்ப்பயனுய்ப் படிந்தே னென்னுங்
கோலமுறும் பொருளமைந்த கவியொன்றை
நினைந்தனருட் குளிர்ப்ப நின்றார். 20

அக்காலப் புள்ளாரி னருமகளாங்
குடங்கையென வகன்ற கண்ணுண்
மைக்காரின் மலர்க்குழலாண் மலர்தருபுண்
டரீகாக்கர் மனைக்கி ழத்தி
தக்காரே புகழ்தருமோர் தனயசிகா
மணிவயிறு வாய்த்தாளென்ன
மிக்காய வுளமகிழ்வி னெழுந்தருளி
மிளிர்மகவை யருளாநோக்கி. 21

வேறு

தான வாரித யைக்கிட னுமதற்
கான காவலி லச்சினை யாற்றுபு
சீனி வாசனெ னுந்திரு நாமமு
நானி லம்புகழ்ந் தார்த்திட நல்கியே. 22

செய்தி யன்னதி ராயனோர் சீடன்பா
லெய்தி யுத்தர தேயமி ருந்தருண்
மெய்தி கழ்திரு மேவிய தந்தைபா
னெய்து சேரநு வன்றுடன் விட்டனர். 23

விட்ட நன்மை யறிந்த விழுமியோர்
மட்டொ ழிந்தம கிழ்வுள மீறவே
தொட்ட ருந்தவெ ழுந்துளி தூயநீர்
பட்ட தென்புலப் பண்ணவ ராடினர். 24

ஆடி மைந்த னவதரிப் பென்விழா
நாடி நன்கு சொண் டாடிந லக்கெலாம்
வீடெ னுந்திருக் கச்சிமி டைதரற்
கூடெ ழுந்தந ரையுட னுற்றனர். 25

அன்றி ராவவர்க் காயக னவிடை
யென்றி ருக்குரு கைப்பிரான் பிள்ளானுக்
கன்று பாடிய காரா ருளிய
வொன்ற யத்திருக் கண்டனு முற்றரே. 26

ஐய நின்திரு மைந்தனுக் காதரஞ்
செய்யி லச்சினை யோடுதி ருப்பெய
ருய்ய நல்கிய வொண்டிருத் தூப்புலன்
கையி லெம்மைக் கலந்தளி யென்றனன். 27

கண்டி றந்துக ருதிக்க னுவினை
மண்டி ராயனி டஞ்சொல மற்றவன்
புண்ட ரீகக்க ணர்பதம் போற்றியே
யெண்ட ணந்தப ரிசுக ளீந்துடன். 28

எம்மை யுய்யவி ழைத்தரு டேசிகர்
நும்மி னுரென நுண்முக மன்பல
செம்மை யார்தரச் செப்பின னன் றுபோய்
வம்மி னென்றுவ ழிவிட்டு மீண்டனன். 29

பின்ன ரந்தப்பெ ருப்புக ழாரியர்
மின்னு பொன் மணித் தண்டிகை மீதிவர்ந்
தின்ன ருந்திற லேத்துற நான்மறை
மன்னு நாவல ரேந்தம திக்குடை. 30

அள்ள ருந்து மமுதென வின்னிசை
யெள்ள ரும்பல மேளமி யம்பிட
விள்ள ரும்பல வீறுட னேகியே
கள்ள ரும்பொழிற் கச்சியை யண்மினா. 31

அந்த வேலையி லானைம லைப்பரன்
சந்த வார்நில யந்தனைச் சார்ந்தவர்
கந்த மாலைமு தற்பல கைக்கொளா
வந்தெ திர்ந்தனர் வண்மைவ ரிசையின். 32

சீரி னன்னவர் சீதரன் கோயிலின்
காரி யங்கொளுங் காவல ரன்றியும்
பேரி ராப குருவெனும் பெற்றியா
ஞரு மவ்வன மன்பினெ திர்ந்தனர். 33

வேங்க டாரிய ரும்மய வெஞ்சிர
னீங்கெ ழுந்தன னென்றெதிர் போதரப்
பாங்கி னன்னவர் பண்புருந் தூப்புலர்க்
காங்கு பன்முறை யஞ்சலி யாற்றியே. 34

கண்ட சொப்பனச் செய்தி கழறியப்
பண்டை மாமுக ஞய பரன்றனைக்
கொண்டு நாளுங் குறைவறும் பூசனை
யண்ட யாவையையு மாற்றுகென் றீந்தனர். 35

பிள்ளை யாரடங் காது பெருமித
முள்ள நின்று புறம்பெழுந் தோங்குற
வள்ள வாய்மலர்க் கைகளி லேந்தியே
கள்ள ருந்திக்க ளித்தன ரென்னவே. 36

ஆடி யாடிய கங்கரைந் தேயிசை
பாடி நாடிக்கு ணங்கள் பலபட
நாடி யாவது நற்பய னெய்துமா
றீடி லாதவென் சொற்களி னேத்தியே. 37

அன்றி ழைத்தவ யமுக னின்றுதி
யின்றெ னக்குப்ப லித்ததென் றேயிரைந்
தென்று மெற்கொரி டுக்கணி லையெனு
நன்ற தைப்படித் தாரங்கு நாடியே. 38

## வேறு

வாகத்த சித்திக்கு வரையா திசைச்செப்பி வையத் துளீர்
போகத்தை யுற்றுப்பொ ருந்துங்கள் கவிதார்க்கி கச்சியனு
லாகிச்சி றந்துள்ள தாமென்று மொருசுலோக மங்கேவணைந்
தோகைப்பெ ருக்கத்தி னுதனீறி ணைத்தேமு டித்தொன்றவே. 39

அம்மாமு கன்றன்னை யன்போடு தாநாளு மாராதனஞ்
செம்மாம லர்த்தேவன் செய்தென்ன வேசெய்யு மருளாளன்பா
லம்மாவி ருத்திப்பி னடைவோடு நாறும்பூ சனையாற்றியே
யெம்மா மதத்தோரு மிரிந்தோட வயமுண்டி ருந்திட்டனர். 40

ஏகச்சி னாளங்கெ ழில்வேகங்க டங்காண வேழச்சிலர்
பாகத்த வன்கண்டை தாமாகை யானப்ப ரந்தாமனின்
பூகற்ற வடிகண்டி றைஞ்சுங்க ருத்திற்பு றப்பட்டுடன்
மாகத்தை முடிபோழு கடிகாச லந்தன்னை மணந்தேறியே. 41

வீழாவ டைந்திட்ட விமலர்க்க கம்வீழு மவைதந்தவண்
வாழாவி ளங்குற்ற வக்காரக் கனிதன்ம லர்த்தா டொழு
தூழானு ணர்ந்தேத்தி யுவந்தப்ப ரன்றீர்த்த முதலுண்டுபின்
னாழாவெ ழுந்தந்த வடவேங்க டப்பொற்பு தாங்கண் டனர். 42

அச்செய்ய மலையென்னு மனந்தாழு வானைக்கண் டங்கேகர
முச்சிக்க ணேறிக்கு விந்தேதொ ழுதுசொன்ன முகியுந்தியை
நச்சிப்ப டிந்தாடி யலர்மேவு மங்கைப்பொ னளினப்பதம்
மெச்சிப்ப ணிந்தன்னை யருளோடு பிரசாத மிடைந்தேகியே. 43

முன்னாளடிக்குன்றி லிலகத்தி ருப்பூதூர் முனிபுங்கவர்
பண்ணுவ ருச்சித்த வாழ்வாரா சிரியர்ப்ப தம்போற்றியே
பொன்னாரு மருமத்த கோவிந்த ராயன்றன் பொற்றாடொழு
தென்னாரு யிர்க்காய விறைவா வருள்கென் றெடுத்தேத்தினார். 44

நஞ்சீனி வாசன்க ருணையென்னுங் கழைநின்று நனியூறிடு
மஞ்சாற தின்வைக லாகிக்கு விந்துள்ள வடுசர்க்கரை
மஞ்சாடு மலையாம லிந்துள்ள தேயென்று மறைதற்குறு
மஞ்சாரன் மணிமன்னு மழகாய மலைதன்னை யடைகிற்பனே. 45

* * * *

திவ்விய சூரி சரிதம் முற்றிற்று.

---